(சரணங்கள்.)

கங்கையில் பன்னீராண்டு முன்தாழ்ந்த
கலத்தைக்காக்ஷியாய் அழைத்தவா!
மங்கையுயிரைப் பருகுநேர்ஜின்னை
துங்கக் கூஜாவினில் அடைத்தவா!
மாயா! புகழ்தூயா! செவ்வாயா!
மருமாலையணிகாயா! (யார்?)

மிகுருஜினில் தோளீந்தவா! வரும்
விருந்தை நபியோடுண்டவா!
நருகதிரடி ஒலிகள் தோளினில்
மருத்வமாய்வைத்த மாபாதா!
நாதா! அருள்வேதா! மறைப்போதா!
தர்ம்ம தாதா தத்வாநந்தா! (யார்?)

ஆலநபிக்கீர் நேத்திரா! எங்கள்
அபுசாலிக்கருள் பாத்திரா!
ஓலமிட்டதோர் பருந்தீராகத்
தாலமில் விழச்செய் காத்தவா!
ஓ! தாயகா! குணதீகா! ஜெகநாயகா!
நாகையான் தமிழ்க்கென்றுமே! (யார்?)

---

இராகம் கலியாணி ஆதிதாளம்.

(பல்லவி.)

செய்யிதே குத்துபுல் லகுத்தார் யா பீர்முகையத்
தீனே அப்துல் காதிரே கௌதே!

(அனுபல்லவி.)

வய்யகமெல்லாம்புகழும் துய்யபகுதாதில்வாழும்
அய்யரேமிடையில்தாழும் பய்யலைக்காருமேநாளும்

(சரணங்கள்.)

சோதியறுசில் துயின்றேரே மிகுருஜிற்றேன்
பாதமுறநபிக்கிங்தோரே!
பாதகமெல்லாமகற்றி ஆதரநாமம்நிறுத்தி
காதலாய் இல்லைமவருத்தி பாதமேதந்தாள்திருத்தி
முங்கர்நக்கிர்சுக்குமாறபறித்திர் கங்கையில்தாண்ட
வங்கம்வரவேயழைத்திர்
அங்கொருவன்மறித்தாவி செங்கைஎமன்றனைக்கூவி
சங்கையாய்க்கொடுக்கவேவி யங்குராகூதித்தவாமேவி
வாகைசேர்பகுதாதில்வாழ்வோரே அபுசாலிகு
ஆகமகிழ்ந்தருள்பாலரே
தாகமாய்நித்தியம்துதித்தே நாகையன்தமிழ்மதித்தே
மோகமேயருள்கதித்தே தோகமகலவிதித்தே (செ

---

(இன்னிசை.)

முங்கர்நக்கிரோங்கி முடுகசுக்குமாறபறித்தீர்
முங்கிகடல்தாழ்வங்க முழுதும்வரவேயழைத்தீர்
பங்கமறக்காளாகாப் பையலைநீராண்டருள்செய்
திங்களொளிமங்குமுகம் தீன்தீன்முகையத்தீனே

இராகம் செஞ்சுருட்டி ஆதிதாளம்.

(பல்லவி.)

பாதபங்கயம்தாருமே கவுதேகொடிை
பாவித்துயரைத்தீருமே

(அனுபல்லவி.)

நாதமுழங்கும் பகுதாதுக்கரசாய்வந்த
நாதாவிளங்கும் தர்ம தாதா குத்துபொலியே (பா)

(சரணங்கள்.)

ஆதியறுசில்துயின்றீர் ஆலநபியோ
டன்றுபுகழமுதுண்டீர்
வீதில்மறித்தவன்பெண்டீர் மெலிந்தரற்ற
மேவுமாகாயம்கண்டீர்
வாதுடனேமலக்கல் மவுத்தைவரக்கடிந்து
மரித்தோனுக்காவி கொடுத்தாளுமுகையத்தீனே (

கங்கையில்பன்னீரண்டாண்டு கவிழ்முன்வங்கம்
கவலெளவைக்காயருள்பூண்டு
பொங்கும்சரக்குடன்மீண்டு வரவழைத்த
போதேகுறித்துமுன்வேண்டு
மங்கைதனைவிவாகம் புங்கமுடன்செய்வித்த
மாறுக்காரணத்தாசுல்லாரிபீனேகுத்தூபே (பா)

ஆலநபியின்பேரரே அபுசாலிகு
அன்னலருளும்பாலரே
காலமுழுதும்லோலரே நாவநாகையான்
காரும்பாக்கனுகூலரே
ஓலமிடும்பருந்தைக்கோலமுடனீர்துண்டாய்
உய்த்தேதரையிலுயிர் பெற்றெழும்பச்செய்தோரே

இராகம் துஜாவந்தி ஆதிதாளம்.

(பல்லவி.)

எப்போ வருவாரன்னமே? தஸ்தகிரொலி
ஏதோ தாமதம் சொன்னமே!

(அநுபல்லவி.)

எப்போவருவாரடி? வெப்பந்தணிப்பாரடி!
என்செய்வேன்வஞ்சியே துன்னுதென்னுவல்!
இலங்குகலன்கொள் அலங்கிருதமாரன்! (எப்?)

(சரணங்கள்.)

ஒலிகளுக்கரசாய்வந்தவர் உளத்திலென்றும்
உறுதிகொள் சீலர்க்குகந்தவர்
கலியில்தாழ்பாறமைத்தவர்
வலியில்புகழ்தழைத்தவர்
கற்றுணர் நற்றவ முற்ற மருத்துவ
காரணர் ஆரணப் பூரண வாலர்! (எப்?)

பருந்தை யீர் துண்டாகப்பார்த்தவர் பழையபடி
பண்புடன்பொருத்திக்காத்தவர்
அருந்தவத்தொலித்தோள்வைத்த
பொருந்திருமரைதாள்முத்த
அருங்கதிர் தருமதி யுருவுறுதிருவே!
அநுதின மனதினில் நினைந்தினிதாளேன்! (எப்)

நறைகொளும் பருதாதாதிபர் காக்கநாகையான்
நவில்கவிக்குகந்தருள்பவர்
தறையினில் தீனைநிறுத்தி

குறைமனத்தோரைத்திருத்தி
சங்கையில் மூங்கிய சிங்கவேறின்று
கதியே கதியே மதியேதரவே! (எப்போ?)

---

சாகுல்கமிது ஆண்டவரவர்கள்மீது,

(பின்னீரடி வேற்றொலி இன்னிசை.)

தஞ்சமென்ற பேரைத் தயவுடனே யாண்டருளும்
மஞ்செறி யகுமதுவின் மரபிலுதித்தவரே! மிகு
பஞ்சபாதகஞ்செய் பையல்மூகம் பாரும்துயர்தீர நறும்
கஞ்சமலர்ப்பாதமேதாரும் கமீதொலிநாயகமே!

இராகம் முகாரி மிசுரதாளம்.

(பல்லவி.)

தஞ்சமே யுங்கள் கஞ்சமா மலரடி
சாகுல்கமீதொலியே

(அநுபல்லவி.)

மஞ்சடைமாட மாநாகைதனில் வாழும்
மதியே! நவநிதியே! தங்கள்
மருவைங்கரிரு சரணகதிதர
இரவுபகல்துயர்பெருகிவாடினேன்
தருகக்கடனது திருவே கற்பக
தருவே கமிதொலி குருவேயனுதினம் (தஞ்)

(சரணங்கள்.)

காணவாசூழும் கழனியில் செழித்தோங்கும்
கந்தமாமரைத்தந்த முத்தம்
கண்டவனவனவண்டமெனவணே

கொண்டுதண்டருமுண்டகத்திருத்
தெண்டலுமலர்ப் புண்டிடத்துதைந்
துண்டுமாமது வண்டுகூவிடும்
மாணிக்கப்பூரைவமைந்துகரவுசெய்
மஜ்ஜிகாபர்கள் தனக்காய் தங்கள்
மாதுவயிற்றிருந்தாநயருளினல்
நீதியாய்வெளிதீதிலாதுற
சோதிவாள்கரமீதுமின்னவே
வாதுகூறியசூதர்களொடு
நாணிடாதெதிர் நடத்தித் துரகதத்தை
நன்கரத்தினில் மிகுத்த வாளால்
நரர்கள் புகழ்தா நெருங்குமஜ்ஜிகள்
அரிதுகாணென் வெருவி யிரியவே
பரிவில் சமர்விளைத்தரிய நாயகி
பாத்திமா வயிற் வீற்றிருந்தோரே!
கேணிபின்மயிர்க் கிர்ந்தெண்ணினுமென்றன்
கேடெண்ணவரிதாமே நாளும்
கிஞ்சமறிவிலா வஞ்சிமாகையில்
மிஞ்சிடாதுங்கள் செஞ்சரண்கதி
தஞ்சமேவிய மஞ்செறிநபி
பேரரே அப்துல் காதிறே நிதம் (தஞ்சமே!)
கொட்டவே யேவிக்குழவிதனைவிடுத்தக்
கொடியரகம் கொண்டேற வரும்
குழவி குழுக்களை விழியால் விழித்துறை.

மொழியுமுனமவ ரிழியகுகைவிட்டே
அழியவிழைத்திடக் குழறியாழதுங்கள்
களினவடிபணிந் தெளியோமென்றேரை
இஷ்டமாய நல்லருளீந்திர கூதித்தீர்
எதிர்ஜலமள்ளிநிற்கும் ஒரு
ஏந்திழை மேனி மாந்தளிர் விழி
காந்தளோ வவளேந்து கொங்கையை
ஏய்ந்துநோக்கவும் தேய்ந்தழிந்திட
வாய்ந்தவள் மாதாய்ந்தறிந்தோடி
சுட்டியேமுறை யிட்டிடமகிழ்ந்து
துணைவிழிகொடுநோக்க ஸ்தனம்
தும்பிகுவடென கும்பமும்நிலா
வம்பரத்துயர் செம்பொன் மாநாண
வம்புகூறவு மும்பருமகிழ்ந்
தின்பமேகொள அன்புடன்செய்தோய்
மட்டிலாப்புகழ் மலிதஞ்சைவாழன்னல்
வருந்துந்துயர் தீர்த்தாண்டோய் இன்னம்
வங்கமாழியில் முங்கிடும்வேளைத்
துங்க கஞ்சன மிங்கிதங்கொடு
பங்கமாற்றியே யெங்குமே புகழ்
தங்கும் கமிதொலி சிங்கரேகிதம் (தஞ்சமே)
பாவலர்வரப் பணிந்தெதிராதில்லில்
பதுங்கும் லோபியர் மனம்போல் கடல்
பருகிபருவ சூல்பெருகி முகில்வெளி

கருகியிரவல ருருக வருகலி
இரியவரையாது தருவோரெனவரி
தழுவிவருடம்பெய் தரியங்கரங்கிட

தாவிமாவேரி தடம்பணை நிறப்பிட
சாலிக்கன்னல்கள்போலும் கன்னல்

சந்திபோலவேயுந்துபோந்துநேர்
சந்ததமுகில் வந்தடைதரும்
விந்தைமேவிய விந்தவழ்மாட
அந்தமும் மால்பந்தமிற்கொடி

காவலன் சின்னத்தம்பிமொழிகடந்து
கருத்தழிந்தவர் மனம்போல் துவளும்

கத்தனருள் திரு குத்திமேற்பிர
சித்தநாகையர் சத்தி கோ அசன்
குத்தூஸ் அருந்தவத் துற்ற புத்திர
முத்தே நித்தமும் பத்தியாய்த்துதி

நாவினில் அருள்வாய் நாகையானுக்கு
நங்கையுறை மால் நாடி கண்டோர்

நடுங்கவானெழு மடங்கலெனவொலி
துடங்கிவிடங்கமா முடுகு ஜின்னதை
அடங்கக் கூசினில் ஒடுங்க அடைத்திடும்
அற்புதா திரு பொற்பதா நிதம் (தஞ்ச)

—:—

☞ ஷ பதம், கலியாணியாலும்பாடலாம்.

(இன்னிசை.)

பதுமினியின் கையில் நாகப் பழம் வைத்துருட்டுதிகள்
பதுமமலர்த் தங்கிமதுப் பருகி ஞிமிற் பாடுதிரு
துதிபெருகும் வாவிகள் சூழ் தூயதிரு நாகையில்வாழ்
மதுபோல் மொழிமேவும் மன்னர் கமீதொலியே

இராகம் சௌராஷ்டம் ஏகதாளம்.

(பல்லவி.)

தருணமீதையா சாகமீதே
தருணமீதையா

(சரணங்கள்.)

தருணமையா கருணைசெய் நாதரே
தாயகமாகிய நாயக நீதரே
வருண அம்புயம் பொருவும்பாதரே
மன்னர் கமீதொலி யன்னவேலசிதரே (தரு)

தச்சன்பிணியை யாய்ந் தக்ஷணந் தீர்த்தோரே
தஞ்சை ராஜன் முடம் சஞ்சலந்தீர்த்தோரே
பச்சைகிரும்பெல்லோருமெச்சவழைத்தோரே
பாவைக்குயமாற்றி மேவிடச்செய்தோரே (தரு)

பொன்னைத் தொளிக்காகத் துன்னவேயீந்தோரே
புத்தைநீருண்ணவேபத்தியாய்ச்செய்தோரே
ஜின்னைக்கூசிலிட்டுக்கன்னியைகாத்தோரே
தீராதநோய்கள் தீர்த்துந்தேரோடாச்செய்தோரே

நஞ்சை அமுதாக விஞ்சையாய்ச்செய்தோரே
நம்பும் இருடியின் துன்பத்தைதீர்த்தோரே
கஞ்சுகில் நின்றிருவஞ்சியையழைத்தோரே

கப்பல்கம்மத்தைக்கண் டொப்பவடைத்தோரே

வாகையுறும்திரு நாகையில்வாழ்வோரே
வண்மையசன்குத்தூஸ் புண்ணியபாலரே
நாகையான் தமிழ்களைத் தாகமாய்க்கொள்வோரே
நாதா கமீதொலி வேதா ப்ரதாபரே (தரு)

......

(நேரிசை வெண்பா.)

உலையின் மெழுகதுபோ லுள்ள முருகி
நிலையிழந்து வாடுகிறேன் நீதா கலையறியேன்
கோருங் கவிக்கிரங்கிக் கூர்ந்தே யருள்கொடுக்க
வாரும் வாரும் கமீதே!

இராகம் காப்பி அடதாளச்சாப்பு.

(பல்லவி.)

வாரும் வாரும் இவ்வேளையே
தாரும் தாரும் பொற்றாளையே!

(சரணங்கள்.)

சீருலவும்நன்னகையா செழிக்குந்தார்புனைவாகையா
காரைநேர்தருவீகையா கடுக ஆள சாகமீதே (வா)
தத்துவத்துறைநின்றோரே சாயுஜ்யவழிசென்றோரே
சத்தியையகங் கொண்டோரே சமையமாளசாகமீதே
விணில்காலங்களற்றுதே வேசியர்க்காளாகாச்சுதே
நாணிப் பிந்துடலேச்சுதே நயந்தந்தாளசாகமீதே
அசன்குத்தூஸருள்பாலரே அன்பருக்கனுகூலரே
இசைதரும்வடிவேலரே இதங்குநாகையான்பாலிதே

(ஏந்தவிதவல்)

இராகம் ஆநந்தபயிரவி ஏகதாளம்.

(பல்லவி.)

சந்ததம்புகழ்மலி சரணும்புய முதவும்
சாகுல்கமீதொலியே

(அநுபல்லவி.)

கொந்துலவும் பொழில்சூழ்
விந்தைநாகை நகர்வாழ்
கோவே சாகுல்கமீதே
தேவேயென்மீதே
கூவிலருள்செய்தையா பாவித்துயர்தீர்மெய்யா (ச)

(சரணங்கள்.)

அங்கிங்குமோடி யெங்கும் வழிதெரியா
தலேகிறேன் நாளும் பூமீதே! குகை
வங்கமாயங்கம் பங்கப்படுத்துதையோ
மாந்தர்வசை பெரிதிப்போதே!
சங்கையறவாட்டுதே! சகிக்காதே ஒரு
சண்டாளி கொடு நீலியவள் சூதே
தொங்கிமேல்மெலிய ரதிச் சிங்கைநகர்மீதே
தொண்டன்மொழிதள்ளாதே கொண்டணைத்திதே
துன்பம்வறுமைதீர்த்தே நம்பும்பையலேக்காத்தே (ச
கம்மத்தினுலேயவதிப்படும் வங்கங்கைக்
கண்ணுடியாலடைத்தோமே மிகு
கொம்மைநிறைந்தஸ்தனத்தை மாற்றிமுன்போலும்
கோதையொருத்திக்களித்திரே
ஜெம்மல் முடங்கித்தோமீர ஜெகப்பீரே கூசில்

ஜின்னேச்செலுத்துமதிஜயகாரே
கம்மையிருடியாரே செம்மைவழிநேரே
காகூஷியாயழைத்தோரே மாகூஷிமையாரே
கவ்வுந்துயர்தீரே ஒவ்வும்புயமாமேரே (சங்)

அந்தணர்போற்றும் மாணிக்கப்பூர்நகர்வாழ்
அசன்குத்தூஸ் அருளியபாலா நாளே
சிந்தைத்துயர்தீத்தாளும்செய்யிதிறசூல்
ஜெம்மலுக்குகந்தவடிவாலர்
கந்தங்கமழுநாகைக்கனுகூலா எங்கள்
கவுதுல்லகுலமகிழ்த்திருப்பேரா
வந்தகாபர்களேலா சிந்தவடித்தவாளா
வையும்நாகையான்மேலா உய்யவேசீலா
வண்மைபோதகநூலா புண்ணியபுவிசெங்கோலா

—·—

இராகம் இந்துஸ்தானிகாப்பி அடதாளம்.

(பல்லவி.)

இந்த அவகாசம் ஒலிக்காருரைப்பாரடி?
எனக்கார் கதி இனி வேறடி!

(சரணங்கள்.)

நந்துலவும்வயல்சூழ் நாகைதனில்வாழ்பவர்
நாடினோர்க்கருள் தருவோரடி!
சொந்தவடிமைதுயர் தோயுமியலறிவார்
சொல்லுமுன் சுகந்தருவாரடி! (இந்த)

கட்டையையோடமாக்கியே காகூதியுடன்சென்றவர்
 காத்திமன் நபி திருப்பேரர்!
இட்டநஞ்சையமுதாய் இன்பமுடனுண்டவர்!
 எளியோர்களுக்குபகாரர்! (இந்த)

ஜுப்பாவிலிருந்திரெழில் தோகைவரச்செய்தவர்!
 சுகுர்தகுணதயவாசர்!
முப்பழமிணைத்தமொழி மொய்குழலவாவிட்டோர்!
 மூலகுமிழ்ப்பிரகாசர்! (இந்த)

மாணிக்கப்பூர் அசன்குத்தூஸ் மாதவத்துதித்தவர்
 மன்னர் சாகமீதொலிநாதர்!
பேணும் பாசொல்நாகையானைப் பேதமுறுதாள்பவர்
 பெரியோனருள்மலிநாதர்! (இந்த)

---

(பின்னீரடி வேற்றொலி இன்னிசை.)

சங்குசூலுழைந்தீன்றந் தரளமதைப்பெடை யனங்கள்
புங்கமுறுந்தன்கருவாய்ப் புந்திலெண்ணிக்காவலுற நனி
பங்கயமிலிங்கிரதமாய்க் கண்படைவாவிசூழாதி அருள்
தங்குத்திருநாகைநகரில்வாழ் சாகுல்கமீதொலியே

இராகம் சாவேரி அடதாளம்.

(பல்லவி.)

சாகுல்கமீதொலி யென் நாயகமே தங்களிரு
சரணகதியைத்தந்தாளும் தாயகமே

(அனுபல்லவி.)

நாகுலவும் வயல்சூழும் நாகைநன்னகரில் வாழும்
யோகநாயகி பாத்திமாவருள்

போகரே! புயவாகரே! நிதம் (சாகு)

(சரணங்கள்.)

ஜின்னேக்கூசில் செலுத்திவிட்டோரே!
[தோராம்பட்டையில்,]
செம்பொன்னல் தூண் நிறுத்திவைத்தோரே!
[குளத்தருகோர்;]
கன்னியின் திருதனத்தை மாற்றிட
அன்னே யறிந் தழுதோடி போற்றிட
முன்னிலதிகெழில் துன்னவீந்திடும்
முக்கியரே! தவமிக்கரே! நிதம் (சாகு)

வஞ்சிய ராசை மிகுவேடன்
[மார்க்கமொழுங்கு,]
மவுலுவோர் சொற்கோளா நிற்மூடன்
[புவிதனிலே;]
பஞ்சபாதகம் செய்திடும் பாவி!
துஞ்சுமுன்னமே வந்தருள் மேவி
தஞ்சமென்றவர்க்குதவுஞ் சஞ்சீவி!
சாபல்யா! பிரதாபல்யா! நிதம் (சாகு)

முத்திலுற்றிடும் நபியின் பேரரே!
[அபுசாலிக்கருள்,]
முகையத்தீ ஞெளி மகிழ் சிங்காரரே!
[மாணிக்கப்பூர்வாழ்;]

பத்தி அசன்குத்தா ஸருள்குமாரரே
முத்தியருள் நாகையான்பால் மேரரே
கத்தனருள் குடி சித்தமகுத்துவ
காரணா! மகிழாரணா! நிதம் (சாகு)

---

(பின்னீரடி வேற்றொலி இன்னிசை.)

முத்தாய் மயிலாய் முழுமதியாய்க் கிந்தீலாய்
வித்தாரகாரணமாய் விபுதரதிபதியாய் உயர்
கத்த னருள்தங்கிடும் வள்ளல் கபீபிறசூல் பேரரே நிதம்
சித்தம் பையல்மீதுவைத்தாண்டருள் திருநாகையம்பதியே

* இராகம் மலேயாமி திரிசுரதாளம்.

(பலல்வி.)

கருணைக்கடைக்கண் பாருமையா என்றன்
கவலைதீருமையா

(சரணங்கள்.)

வருணமடவன்னங்களுலாவும்
வளம்பொழில்நாகையரே இது
தருணமென்முகம் பாத்தருள் செய்யும்
சாகுல்கமீதொலியே (கரு)

மாசுகளற்ற முகல்ல தீவுதனில்
மாயக்கொடுமை செய்யும் ஜின்னைக்
கூசினிலடைத்துக் கடலினில் தாட்டும்
கோமான் கமீதொலியே (கரு)

---

 * அஃதை ஜாமாவாலும் பாடலாம்.

சுட்டமரத்தைக் கரத்தால் தொடவே
துளிருடனே பழமும் அது
விட்டுயரச் செய்ய விந்தை விளைத்திடும்
வேந்தர் கமீதொலியே (கரு)
ஜித்தா வழியில் மெழுகு பீரங்கியால்
தீயோரை வென்றோரே மயில்
முத்தா அமைந்த நபிக்கிரு கண்ணென
மூதுலகில் வந்தோரே (கரு)
மன்னர் அசன்குத்தூஸ் ஈன்றிடும் திவ்ய
மாமதியே நிதியே ஏதும்
வின்னமுறுமலே நாகையானைக் காரும்
வேந்தர் கமீதொலியே (கரு)

—·—

இராகம் பயிரவி ஆதிதாளம்.
(பல்லவி.) (பொன்றிற்)

சர்தாத் சற்குருநபி பேரரடி! அப்துல்
காதிறெனும் திவ்விய நாமரடி!

(அனுபல்லவி.)

சீதா மரைப்பாதரடி! கோதா மறைப்போதரடி
செய்யவிதழ் தையலேநீ யுய்ய வருள் செய்வார் நாடி

(சரணங்கள்.)

புத்தை நீருண்ணவேசெய் பூபரடி! எட்டு
அத்தி வளர் திசைப் பிரதாபரடி!
சித்திர மிகுத்தோரடி! கத்தனுக் குகந்தோரடி!
திங்களைப் பங்கம்செய்முக மங்கையேதுதிசெய்நாடி.

தீனுக்கொரு தீபமாய் வந்தோரடி! பாத்தி
மா நல்செல்விக் கிசைந்தகண் பாலரடி!
கோனின்முடம் தீத்தோரடி! மீனின்வளமானோரடி!
கொஞ்சுகிளி வஞ்சியே! நல் தஞ்சவடிகொண்டாடடி
பொன்னைத் தொலிக்காயிந்த புண்யரடி! கூசில்
ஜின்னை யடக்குமா வல்ல தீரரடி!
பன்னு தும்பைமாரரடி! மன்னுபத்மக் கையரடி!
பந்துமுலையந்தமணி சிந்துமொழியே நேரடி (சா)
சித்தருலா மாணிக்கப் பூரரடி! அசன்
குத்தூஸின் தவமால்வரு சீரரடி!
சத்தியுறுசீலரடி! முத்திக்கனுகூலரடி!
வித்தர்புகழ் நாகையானின் பத்தி தமிழ்க்கன்பரடி

---

முத்துப்பேட்டை சாம்பானோடை யிலடங்கிய
செய்குதாவூதொலிபேரில்,
(இன்னிசை.)

சந்தனம்கமழ்தங்கள் சரணமலரைத்தேடி
வந்தவர்கள்நோய்க்குறைகள் வாட்டிய நள் செய்வோரே
நொந்து பிணியால்வாடி நு ்பதமே தஞ்சமுற்றேன்
சிந்தைமகிழ்ந் தாண்டருள்செய் செய்குதாவூ தொலியே

இராகம் சௌராஷ்டம் ரூபகதாளம்.
பல்லவி.)
செம்பொற் பதம் நம்பினேனென் பீரே
செய்குதாவூதொலி மகாமேரே

(அனுபல்லவி)

அம்பிலுங்கூர் விழி மூதேவி
ஆசையால் மோச மாகினேன் பாவி! (செ)

(சரணங்கள்.)

மங்குலெழும் மாமதி போன்ருரே
வயிற்று வலிதீர துயில்வோன் முனம் வந்தே
வாயைப்பிளவென தூயவெளஷ்தமை
வார்க்கத்துயில் நீக்கத்தகல்
மௌனத்தையான் கவனித்தறிவேனே! மங்கு
மதிபண்டித வேஷங்கொண்டீரே
அங்கங்கோர்ந்தனுகின்ருரோ
அன்புடன் காத்தருள் வோரே (செ)

மித்ரர் சபை கண்டிடல் நாணுதே!
விதியின் பலனிதோ! முதியோர் சினத்தீதோ!
வேசிமார்களின் நேசப்பலன் கண்டே
விட்டுய்திட தட்டெய்தியே
விரியும்பெயர் பிரியத்துறைசார்ந்தேன் மித்ரர்
விரைதீர வழியானதே
பத்திநின்னருள் வேணுதே
பையலாள் வசைமீ காணுதே! (செ)

முத்துநகர் சாம்பா னேடையில்வாழ்
முழுமாமணி புகழெழு மாவணிபுய
மூரிபனி யிசுருயில் வழிவரும்
மோனக்கொடி மானேப்புணர்
முகிலொண்கர ஜெக விண்புகழ்வோரே முத்து

மொழிநாகையான் துயர் தீர்த்தாள்
சித்திரமிகு மிருதாள்
செய்கு தாவூதொலி தந்தென்னுள் (௪)

—:—

மகுமூதுபந்தரென வழங்கும் பறங்கிப்பேட்டையில்
அடங்கிய

சாலிக்கண்டு சாயபொலி பேரில்,

(பின்னீரடி வேற்றொலி இன்னிசை.)

ஆதியொளிவி லமைந்த அகமதுற் றசூல் சறகின்
நீதிமுறையும் பிசகா நிற்மயத்தின் சற்குருவே தினம்
தீது செயுமையல் துயர்தீரத்தேடினே னிவ்வேளை மனச்
சாது மலிந்தோங்குபுகழொலி சாலிக்கண்டு சாகிபே

இராகம் ஆநந்தபயிரவி ரூபகதாளம்.

(பல்லவி.)

சிகம்புகழ் பொற்பாதமடி! துயர்தீரநாடியென்
சிந்தையுருகிவாடுதே! இருகண்ணில்நீர்
சிந்திவசையுண்டாகுதே! இனிதாளாது
தந்திரஞ்சொல்தோழியரே? ஆ!

(அனுபல்லவி.)

வகைபெறும் மூவாசை யற்றவர் மகிழுற்றவர்
வாமமுடிபுனே கோமானடிதொழும்
சீமான்தவமுடையோர்
சாலிக்கண்டுசாகிபாம், அவர்கள் விரி (சிக)

(சரணங்கள்.)

கத்தனருள் பெற்றநபி புத்திரிவழியில் வந்த
குத்தூபுமுகையத்தீன்தாள்வைத்தோளாம் தன்னை
பத்தியாய நிந்த பாக்கியராம் பாவாக்கியராம்
சத்தியை யாயிரஞ்சேடன்
சத்தியோ மொழியகண்டாய்
சாந்தகுண அருள் வேய்ந்த விழிமறு
தோய்ந்த நெற்றியராம்
சாலிக்கண்டுசாகிபாம், அவர்கள் விரி (சிக)

வின்னஞ் செய்திட நினைந்த சன்னியாசியைக்கிழித்து
முன்னங்கலங்கியபாலன்தன்னைகாத்தோராம் மச்சம்
சொன்னயமறிந்துகொள்ளாரை துஞ்சச்செய்மானை
பின்னியவலையன் நாலாய்
முன்னிட க்கிழித்தசத்தி
பிடுதோயுயர் விடுமுங்கியே
சாடு நாயகராம்
சாலிக்கண்டுசாகிபாம், அவர்கள் விரி (சிக)

சீதமதி தவழும் பீதமாடமா மகு
மூதுபந்தர் வாழரு போத மிக்கோராம் பூவில்
வேதியர்க் குகந்த சீலராம் விரிபுயராம்
நாதமொழிநாகையனே
ஆதரித்தாளும் செல்வராம்
நத்தறிவுமிகு முத்து குசை
நெயினுரின் வம்மிசராம்
சாலிக்கண்டுசாகிபாம், அவர்கள் விரி (சிக)

தயங்கம்பாடி

மசாயிகுசாகிபொலிபேரில்,

இராகம் நாதநாமக்கிரியை அடதாளச்சாப்பு

(பல்லவி.)

ஆரோ வென்றூராயா தசட்டைச்செய்வதோசொந்த
அடிமை மசாயி கன்னலே!

(அனுபல்லவி.)

பாரோர்புக ழூபகாரா உமைநாட
ஆராதுயர்முதல் தீராதவ ருண்டோ!
பாரூர்ந்தாரும் பாதாரந்ததிபித்து
படியில் வசைமொழி படருதினிசொன்னேன்

(சரணங்கள்.)

கந்தமாயன்றுகவலுந்தாதைமொழிமறந்ததோ பெறு
காதலினுமெனையாதரித்தோர் பத்வாவிதோ
தொந்தமேவியகுருக்கள்துறவரையிகழ்ந்ததோ கவி
சொல்லினுமனுடர்மேல் வல்லிலாநாளுமிகழ்ந்ததோ
[அறிகிலேன்]

எந்தவாறிருந்திடினுமருத்துவா
இரங்கியனுகியே யிடுக்கணகற்றவா
விந்தையாய்க்கடல்மீதுநடந்தவா
விரும்பமரித்தெழுந்தரியமாதவா (ஆ)

கோழிக்குஞ்சுமாபுறவைசுவற்றினிற்கிறிக்கியே! அங்
குந்தியிருந்தநின்வந்தையறியாமலுறுக்கியே
கோழைவாணிகர்குறித்தகடுமொழியிறுக்கியோ கை

கூய்த்துதட்டியொன்ருயுங் குழுவுடனிறக்கியே

[புகழ் இல்லில்]

ஆழியேசெழுமரைமேல்நீர்போல
அற்பன்மனதையோதற்சமையகோல
பிழையோடினிபெயராதுறுமால
பிழையையறிருவாய்த்தழையாதிரிசால (ஆ)

கோடியூகமென் னுடல்விட்டுயிர்நீங்காதின்பமே தந்து
கோடிநாவும்காத்திப் கோடிபேரெழுதத் துன்பமே
பாடினேன் துலையாதுமுடிவில்நீரின்பமே கொண்டு
பரவுமிருள்பூவிலிரியவருசந்திரவிம்பமே

[நாகையான்நான்]

வாடிடாதருள்மருதூம்வழில்சந்த
மணிமசாயிகென்கண்மணியேமரைகந்த
ஓடைமீதினிலெருதால்வாளையுந்த
உருத்தேன்தயங்கமாககரோங்கிடவந்த (ஆ)

---

திருமுல்லைராயன்பட்டணம்

அ ப து ற் ற கு ம ா ன் ச ா கி பெ ா லி பே ரி ல்,

இராகம் கமாசு ஆதிதாளம்.

(பல்லவி.)

ஆர் உரைத்திடுவார்களடி யன்னமே! எங்கள்
அப்துற்றகுமான்சாகிபிப்போதறிந்திடவே

(அனுபல்லவி.)

தாருரைமாரர் தவத்திற்குபேரர் ரீ-ரீ-ரீ-ரீ
சரணகதிவழிகண்கருணையுடனெய்திட (ஆர்)

(சரணங்கள்.)

கற்பகக்கரத்தார் அற்புதவரத்தார்
குணத்தார் மணத்தார்
காலகாலமனுகூலதயாள மனத்தார்
அற்பர்கள் மேற்கவி சொற்புகாதிற்புவி ரீ-ரீ-ரீ-ரீ
அணுகும்வறுமையுடல் பிணியுமகற்றிடவே (ஆர்

சிங்கவேறனையார் துங்கமேரிணையார்
துணையார் கணியார்
செய்யிதப்துல்காதிற்கமிதொலிதேடிவரும்புண்யர்
பங்கயப்பதந்தொடும் அங்கவன்பிணிவடும் ரீ-ரீ-ரீ-ரீ
பாத்துமங்கிழ்கொடுத்துக் காத்தனுப்பியவள்ளல்
சேடுபெண்ணீடும் கூடியேயாடும்
மாடம் கூடம்
திருமுல்லைராயன்பதி செழிக்கவந்துற்றவருள் பீடம்
நாடியேமானேகூடியேதேனே ரீ-ரீ-ரீ-ரீ
நாகையான் தமிழ்க்கருள் வாகையொலிக்குச்சென்று

---

கியால்மெட்டு

(பல்லவி.)

நிதமாளுவீர் நீரேகதி யொலி யென் பீரே

(சரணங்கள்.)

கிதம் கதம் தரவாராய் இதேததி மேரா பீரா

நீதரப்துற்றகுமான்சாகிபே
நீரேகதியொலியென்பீரே (நித)
வருடத்திற்கிர்விடுத்தம் வாசமணியும்பொருத்தம்
வாம அப்துற்றகுமான்சாகிபே
நீரேகதியொலியென்பீரே (நித)
இட்ட கபனிட்டபடி இருந்தவா என்றன்மிடி
ஏக அப்துற்றகுமான்சாகிபே
நீரேகதியொலியென்பீரே (நித)
திருமுல்லைராயன்பதி செழிக்கவந்தோய் என்மிடி
தீரநாகையான் தமிழ்க்கருள்
நீரேகதியொலியென்பீரே (நித)

—:—

திருமங்கலக்குடி

மவுலா அபுபக்கர் சாகிபொலிபேரில்

இராகம் எதுகுலகாம்போதி ஆதிதாளம்.

(பல்லவி.) (திருமா)

எந்தவிதமும் செம்பொற் பாதமே தந்தே
யேழை யென்வறுமைத்தீர் நீதமே

(சரணங்கள்.)

செந்தாமரைத் தடாகம் சூழும் புகழ்த்
திருமங்கலக்குடியில் வாழும்
அந்தமிலானருள்சேர் நாளும் மவுலா
அபுபக்கர் சாகிபே நீராளும் (எந்த)
மாளும் விலங்கெலும்பை நோக்கி பூவில்

மறையோர் மகிழ வுறைதாக்கி
மீளவுயிர் கொடுத்துண்டாக்கி விடும்
வேந்தரே பையலைச் சீர்த்தூக்கி (எந்த)

பட்டமரம் தழைக்கச் செய்தோரே பார்ச்சூழ்ப்
பரவையை யழைத்த மாதீரரே
அட்டுமறைவாக்கியத்தோரே மவுலா
அபுபக்கர்சாகிபே யென்பீரே (எந்த)

காரைப்பழித்த மலர்க் கையரே யாதி
கருணை மலியுந்தவத்துய்யரே
ஆருமற்றப்பாவியா னையரே மவுலா
அபுபக்கர் சாகிபே மாமெய்யரே (எந்த)

வாகையணியும் புயவாசரே திரு
மங்கலக்குடியில் வாழும் போஜரே
நாகையான் தமிழ்க்கருள் காசரே இந்த
நானிலம் புகழ்ப் பிரகாசரே (எந்த)

---

இராகம் இந்துஸ்தானிகாப்பி ஆதிதாளம்.

(பல்லவி.)

இந்த வேளை என்றன் துயர் திருமையா புகழ்
கந்தமலர்ச் செஞ்சரணம் தாருமையா

(அனுபல்லவி.)

செந்திரு தினமுலவும் திருமங்கலக்குடி வாழ்
மந்தரமனையகர மவுலா அபுபக்கர்சாகிபே (இந்த)

(சரணங்கள்.)

பன்னிரண்டாண்டு தவஞ்செய்ப்பாக்கியரே இறை
தன்னருள் குடிகொள் மறைவாக்கியரே
வின்னமுறப்பட்டமரந் துன்னவேயருள்புரிந்த
கன்னலே மவுலா அபுபக்கர்சாகிபொலியே (இந்த

கொஞ்சியேகுலவும் கோதையின்பமுடன் நிதம்
வஞ்சமேமனதிற் குடிகொள்ளும் வேடன்
தஞ்சமுமையல்லாது வேறுண்டோயித்தரைதனில்
அஞ்சலென்றுளும்மவுலா அபுபக்கர்சாகிபொலியே

தரைபுகழும் திருமங்கலக்குடிவாழ் மகா
துறைகண்டறிந்துத்தெளிந்தோரே யென்னுள்
கறையறவே தங்கள்பதம் காலமுழுதும்நம்பியே
அறைநாகையானுக்கருள் மவுலா அபுபக்கர்சாகிபே

—:—

கூத்தாநல்லூர்

அப்துல் முகம்மது சாகிபொலி பேரில்,

(இன்னிசை.)

மான்பாய வென்ற விழி மாதிடகிற் புகையடங்கா
வான்பாயப் புயல் வெருள மகிழ்ந்து புலவோர் துதிக்க
மீன்பாய மாகதலி வெடித்துத் சடந்தோறும்
தேன்பாயும் கூத்தாநல்லூர் திகழாலீம் சாகிபுவே

இராகம் ஆநந்தபயிரவி ஆதிதாளம்.

(பல்லவி.)

அற்புதமாய்ப் பூவில் கற்பகநேர் வந்துற்ற
அப்துல் முகம்மதொலியே

(அநுபல்லவி)

கற்பதமில் நாடோறும் பற்பிரபந்தம்பாட
காவிலுரையும் கொடு பாவியிலும் பாவியான்
நம்பினே னின்பமாய் உம்பர் நிதம்புகழ்
அம்புயசரணென்றன் துன்பமேதீர (அற்)

(சரணங்கள்.)

சோற்கூற யருந்தி தறை பாத்திரமிட்டுவைக்கத்
துய பிரியானி யாகச்செயும் பீரே முன்னம்
போற்றியேநாற்பதுநாள் தோற்றுந்தாழங்குருத்தைப்
பொசித்துப் புறுகாளேனும் புகழாரே பூவில்
மாற்றுயர்ந்ததங்கமே! காத்திரமாமணியே!
மாயப்புவியில் பெறும் தாயைப்போலவேகாக்க
நம்பினே னின்பமாய் உம்பர்நிதம்புகழ்
அம்புயசரணென்றன் துன்பமேதீர (அற்)

கஞ்சஸ்திரநில்லாவிழிக் கஞ்சனமிடுமாதர்
நரலேமாயமில் முங்கா குரு நீரே எழில்
கஞ்சமலர்ப்பாதத்தார் தஞ்சதஸ்தக்கிரொலி
கழல்தோளில் பதியும் நற் கதியாரே நாளும்
பஞ்சபாதகமது நெஞ்சந்தனிலுரையாய்
பையலேயாண்டருள்செய் செய்யமலர்க்கையரே
நம்பினே னின்பமாய் உம்பர்நிதம்புகழ்
அம்புயசரணென்றன் துன்பமேதீர (அற்)

செல்லடைசோலே கூத்தானல்லூர்வாழும் பிரபல்ய
செய்த முகம்மத அருளிய கோவே புகழ்
சொல்லப்துல்நத்தர் வழி வல்லிசுமாயில் தவ

கூதன் சின்னத்தம்பிஃபையாள் நயதேவே நின்னை
அல்லும்பகலும் கெஞ்சும் புல்லன் நாகையானை
அன்புடனேகாரும் நம்பினோர்க்கருள்வோரே
நம்பினேனின்பமாய் உம்பர் நிதம்புகழ்
அம்புயசரணென்றன் துன்பமேதீர (அற்)

---

இயால்மெட்டு.

(பல்லவி.)

தஞ்சவடி தந்தாண்டிடவே நற்
றருணந்தருணம் தயைபுரியும்
மஞ்சடைமாடம் கூத்தாநல்லூர்
மகிபதி அப்துல்முகம்மதுவே

(சரணங்கள்.)

அஞ்சனம் படிவிழி மாதர் மாய
ஆசைவலையுள்ளாகாதோய்
அஞ்சலென்றுள வேறுண்டோ?
அப்துல்முகம்மதுசாகிபுவே (தஞ்ச)

கைதைத்துருத்தையெண்ணாந்து தினம்
களிப்புற்றருந்தி மறையோதும்
ஐதரு வனைய கரரே
அப்துல்முகம்மதுசாகிபுவே (தஞ்ச)

சாதமுண்டுப்பாத்திரத்திற் களித்
தரையையிட்டுத்தமர் வைக்க
ஆதியருள் நல்லமுதாவுண்

அப்துல்முகம்மதுசாகிபுவே (தஞ்ச)
சேகரர் வாழ்க் கூத்தானல்லூர் எங்கள்
செய்குமுகம்ம தருள்பாலா
நாகையான் தமிழ்க்கிரங்கும்
நன்பரே அப்துல்முகம்மதுவே (தஞ்ச)

---

ஏனங்குடி — கரைப்பாக்கம்

மலங்குசாகிபொலிபேரில்,

இராகம் கலியாணி ஆதிதாளம்.

(பல்லவி.)

சஞ்சீவியே சௌபாக்யரே! தயைமலங்கு
சாகிபொலியே யென் பீரே!

(அநுபல்லவி.)

மிஞ்சுதே துயரிவ்வேளை! வியன் சேரிரு பொற்றாளை
தஞ்சமுற்றேன் பூவில் நின் தாஸன் தனக்கிரங்கும்
சத்திகொள் உத்த மகுத்தவனுக்குக்ந்
தித்தலமூற்றிலும் பத்திகொள் நாதரே
* சா - சரிக - சரி - சரி - கம - ரி - சரி
தளங்கு - தகு - திகு - சரி - கம - பத - நித (சஞ்)

(சரணங்கள்.)

புவியைச் சதமென்றெண்ணியே கசடரோடு
புரிந்தேன் உரவைநண்ணியே

---

☞ * இச்சின்னமிட்டவிடங்களில் அநுபல்லவியின் ஈற்றடியிரண்டும் பாடுக.

தவிக்கிறேனேயிவ்வேளைத் தாமரைநீரைப்போல
  குவிமுலைவேசியர்கள் கொள்ளைமயலிற்சிக்கி!
    கொந்தவிழ் மந்தர திண்புயரே ததி
    வந்தருளிங்கொளிர் சுந்திர நவநிதி * சா (சஞ்)

பச்சைப்பணி புனைந்தோரே          முசிபத்தோட
  பரிவாயூர்வலம் வந்தோரே
கச்சணிமாதர்மயல் களையும் கடாக்ஷகரே
  பக்ஷமுகம்மதுமதாறுசா பாவில் வைத்து
    பற்பல துற்செய விற்றரு முற்பவம்
    சொற்பனமற்றிரிகற்பகம்வெட்கரா * சா (சஞ்)

இந்திரபுரி நேரோங்கும்          ஏனங்குடிசேர்ந்
  திலங்கும் கரைப்பாக்கம் தாங்கும்
சிந்தைமலங்கொலியே செப்பும் நாகையான்பேரில்
  பந்தமிகுமேழைபங்காளா தயாளாமுகம்
    பாருமைநேரிலே பாரினில் நீரலால்
    தாருமருள் கதிசேர் துயர்தீரவே * சா (சஞ்)

---

திட்டச்சேரி

மன் சூ ரொ ஸி பே ரில்,

(கொச்சகம்.)

மூரிமணிகெம் பொளியை முக்கியகதி ரிந்தெனவே
வாரிசங்க ளாரப்பல் மலர்ந்தொளியும் வாவிதிட்டச்
சேரிவாழ் சஞ்சீவி ஜெம்மசா பல்யகுண
மாரிநேர் செங்கரரே மன்சூரொலி மேரே

இராகம் துஜாவந்தி சாப்புத்தாளம்.

(பல்லவி.)

காத்தாளுவார் மயிலே! பையலென்பிணி
தீர்த்தாளுவார் குயிலே!

(அனுபல்லவி.)

ஆர்த்தெழும்கயல்தட்டத்தூர்த்தெழும்புயலண்டர்
அதிஜயமெனதுதி சூதிகொள் திட்டச்சேரிவாழ்
அண்ணல்மன்சூரொலி புண்ணியரனுதினம் (கா)

(சரணங்கள்.)

சொற்பனத்திடமுரைத்தவர் கௌதுல்லகுலம்
துங்கவடியுறப்பெற்றவர் அரும்
தொல்லுலகில் யாருமகா வல்லவரெனக்கொண்டாட
அற்புதம்பல விளைத்தவர் கதிரோடிந்தும்
அஞ்சுமுகவாமமுற்றவர் அருவாள்
அகத்தில்பயமெண்ணுது செருத்துசேய் நிஜாமொலி
விற்பனர் கனவில்வந்து வெம்பியே ஆசாவால் தாக்கி
மேவும் புகழ் பூவில் தாவும் மன்சூரொலி
விகசித மலர்பதம் அகமகிழுறத்தந்து (கா)

கத்தனுக்குகந்தசீலர் சூளைநளையாக்
காத்தருள் செய்யனுகூலர் சொல்லைக்
கசடர் நசுருணிகள் பிசகென்றிசைத்ததாலே
சத்திகொள் முறையினுலர் மகிழபாவி
க்ஷணத்தினிலறச்செய்மாலர் இது
சமயமுமைநேரிலே தமியனுக்குதவியே
சித்தமிற்கிருபைசெய்வார் சிந்துநீர்வா ட்டங்களைவார்

திணிகொள் புயபசிய பணிகொள் மருத்வதிரு
சேகரர்மன்சூருசாகிபொலியென்றென்றும் (கா

காரைநேர் தரும்பிரதாபன் நிஜாமொலிசெய்
கடுந்தவத் துந்தத்ததீபன் இதனைக்
காதலுடன்பாடவுரை ஏதமறத்தந்துபுகழ்
பாரினிற்றளைகொள்பூபன் நாகைபான்தமிழ்ப்
பண்புணரறியவேகன் தன
பாக்யன் முகம்மதுநத்தர் யோக்யன்றனக்கருள்செய்
காருறைமாரர்குபேரர் சகலகலையறிவாளர்
கட்டுக்கமலவாவி திட்டச்சேரியில்வாழும்
கவிகொளவைய மன்சூரவுலியா நாதரென்றும்
தனிப்பதங்கள்

முற்றிற்று.

---

பிசுமில்லாகி

---

# நபிசல்லல்லாகு அலைகிவசல்லம்

அவர்கள் பேரில்,

## சிந்து.

---

(கட்டளைக்கலித்துறை.)

துதிபதி யாதித் துணையான பாக்யர் சுடரிலைவேல் *
கதிப்பதி யான அபுதல்லா வீன்றக் கவின்மணியாம் *
பதிபதி மக்கத் துறைபதி ஞானப் பதமளிக்கும் *
அதிபதி யெங்க ளகுமது மாநபி யார்குவீரே *

இராகம் நாதநாமக்கிரிகை ஆதிதாளம்.

(பல்லவி.)

அதிபதியெவர்க்கும்நல் லகுமது நபியிதோ வாரார் — தீனோர் துதிசெய்
அதிபதியெவர்க்கும்நல் லகுமது நபியிதோ வாரார்

(அநுபல்லவி.)

அதிபதியெவர்க்கும்நல் லருமதுநாதர் *
அனைவர்கள் நலம்பெற அருள்மருமூதர் *
துதிமதினமில் அரசியல் இறைதூதர் *
தோன்றுபுவிமா நபிகளில் நவநீதர் *

(சரணங்கள்.)

காதங்கமழ்கஸ்தூரிமெய்யர்
பாதம் தரைபடா ததுய்யர்
சீதச்செந்தாமரை நேர் கையர்
பூதகமாய்ப் பொருந்தும் அய்யர்
அங்கிகொள் பாலையில் பொங்கநதியைழைத்தோர்
அங்கதம் ஒன்றிழிப் பங்கமுறவேயடித்தோர்
வெங்கண்புலியோ டங்கவர்மெச்ச உரைத்த்தார்
செங்கை அறுந்திட துங்கமுடனே அமைத்தோர்
கடையுகமுடிவென அடையலர் துடர்ந்தடரெண்ணைக்
படருறநெடுமுடி கடியுடல் அடல்நபி விண்ணை
அடியன் தடவிடைகொள் புடவியில் ஒருபிடிமண்ணை
திடன்மறையுட னேதிபடை மடிந்திட விடக்கண்ணை

கண்டோர்வியக்கப்
பண்பாய்மலர்ந்த
செவ்விகதிஜா
போகும் வழிநேர்
அதிர்ந்தெதிர்த்த
அற்புதமாக
வினையறியான்
திருபதுறில்
கடிந்துமாளப்
பார்த்தேயிரக்க
அள்ளிமுதலோன்
சிமிட்டுமுன்னம்

காபர்களின்படை ஓதை அவிந்த
காளையர்கள் பிணமாகக் குவிந்த
சோபனமாய்ப்பருந்தோரிக்கவிந்த
தும்பை புனைந்து பேரெங்குமலிந்த (அதிபதி)

பதினாலு இல்மும் கரைகண்டோர் பண்புமலிந்த
பதினாலு லோகம் புகழ்கொண்டோர் பானறுசில்
விதினாலுவப்ப விருந்துண்டோர் வேலிற்பூமாலை
துதிநாலுறு வெற்றிகொள்தண்டோர் தோன்ற லுரைபோல்
மங்குலுறவுங் கடிந்தொளிர் திங்கள் முளைத்தே வந்துகஃபா
சங்கைகுடுமியில் தங்கிவலஞ்செய் வித்தே சமமுள்சென்று
துங்கமுடன் தொழு திங்கிதவாயல் களித்தே சுத்திகைத்தரி
சுங்கமுறும்புகழ் புங்கநபிமுன் செழித்தே தூணைத் தாள் போற்றி
தொந்தசலாமுந்திமொழிந்திந்துவாய்த்திறநதேயறபாலே சொலிக்கலிமா
செந்தமிழில்வெந்துகெடுபுநதியர்மறக்கமரம்போலே சிறப்புடனே
அந்தநபிகந்தசுப்பாவிநதையிற்புகுந்துமுதுமேலே அணிந்திராக
பந்தியிருசுப்பாவின்கையுந்தியேயெழுந்துவைமுன்னாலே பரிந்துநின்றும்
படுவானெழுவானிலீப்பர்பகுப்பதுநாடி
பரந்தெழுந்தந்தரமேவிபின்சாடி

விடுசுடர்கஃபாவின்முடிமுனிகூடி
விளம்பிபின்னேகச்செய்முகமதிகோடி (அதிபதி)

ஆதியொளிவில்குதறத்தாய் அடங்கலுக்கும்
மேதகம்விளையுமோர்வித்தாய் விசித்ரமான
சோதியெறியுமதிமுத்தாய் துலையாவண்ணம்
ஏதமறப்பொருத்தும்சித்தாய் எழில்சேர் ஆதம்
முதல்நபிவழிவழி அதுநாங்கிளையில் வரும்ராஜர் அபுதுல்முனுபு
புதுமையுடனேயீன்றதுதிசெய் ஆசீமெனுமாபோஜர் புத்ரராய்வரும்
மதுமொழி அதிபதி அப்துல்முத்தலிபெனுவாசர் மகவாய்வந்த
பதுமமென்மலர்முக முதியவரப்துல்லாநேசர் பாத்திபர்திரு
நெற்றியினில்முத்தொளிவாய்ப்பத்தியுறநின்றபரஞ்சோதி நெறிமிகுந்த
தத்தைமொழியுத்திமிகு சித்திர ஆமினு மகநீதி சூழுமூலகோர்
எத்தினமும் நற்றறிவால் வத்துருப்புகழுமக்கவேதி என்றும்நாகையான்
சித்தமதில்சுத்தியுறமுத்தமிழ் வளரவருளாதி சிறந்தபுள்ளி
மானுடன்பகர்ந்தவாமறுவறுபடையர்
வறுமையறவெளியர்க்கருள்திருகொடையர்
மானவனருள்மலிசூல்முகில்குடையர்
மந்தரமிந்தொளிர்சுந்தரசினுடையர் (அதிபதி)

---

பிசுமில்லாகி

---

கூத்தானல்லூர்,

அப்துல்முகம்மதுசாகிபொலிபேரில்

கந்தூரிச்சிந்து

---

(காப்பு.)

(ஆசிரிய விருத்தம்.)

பூமீது தீன்வளரத் தன்னுற் றோங்கும்
    பொட்கை யினில் மேதிவிழ வெருண்டு வாளை
தாமீது கைதைமடற் பீற மது செற்
    றழுவியடை சூன்மாறிப் பெய்யுஞ் செய்கைக்
கூமீதி லிணையறவே யோங்குஞ் செல்வக்
    கூத்தானல்லூர்ப் பதிவளருஞ் சின்னத்தம்பி
நாமீதி லெழுமொழிபோ லிசைக்கத் தானுட்
    நடுமுதலின் றிருப்போ னெவ னவன் காப்பாமே

---

இராகம் நாதநாமக்கிரிகை ஏகதாளம்.

(பல்லவி.)

கந்தூரி பாராய் கூத்தானல்லூர்ச்
சந்தலை நேராய்?

(அனுபல்லவி.)

கஸ்தூரிசந்தல்பார் ககனமெண்டிசைபுகழ்க்
கதித்த அப்துல்முகம்ம தொலியி னுமந்திகழ்
இந்துநேர்வதனுளே யெங்குங் காணேனிகழ்
இதுபோலவாயுமோ! புவிமீது மனமகிழ் (கஸ்)

(சரணங்கள்.)

மீனகடுறவொளி விரியுங்கலசமுதல்
விளங்கு முத்துச்சுன்னமைக்களங்கமறவேதித்தும்
கானங்கமழு நடுமண்டபம் நாச்சாரி
நவ்வியுறுதுப்பாக்கள் செவ்வையுறுமெத்தைகள்
நயனங்கள் கூசும் பிரவைதனி
மயமெனவீசும் வெண்டுசினுல்
வானிபொதிந்துசுற்றும் வாய்ந்தமிகுருபிலும்
வன்னச்சரிபித்தாளேத் துன்னிக்கலகலென்ன
மேனிலேத்தனிற்படம் மேவும்நிலேக்கண்ணுடி
வீக்கும்பளிங்குச்சரந் தூக்குஞ்செடிவிளக்கும்
விதம்பல "வால்சேட்டும்" "குளோப்புகள்"
மிதமொளிகாட்டும் ரசக்குடுக்கை
ஈனமறவெங்குந்தொங்க இனமணிகள்
இழைத்தச்சரமு நான்காயழைத்தப்பூஞ்சரந்தூக்கி
மானமுடன் மவுலூ தோதிடும் சாகிபு
மார்கள் திரளும்பல பேர்கள் நேத்திக்கடன்

வளமாய்ச்செய்நரனும் பீரேயென்
உளமன்னவருளும் யென்பார்களும்
நானிலமுற்றும்புகழ் நடிக்குஞ் சின்னத்தம்பி
நாயகன்கன்னனின் வாயலெனச்சூழ்ந்து
தேனின் மதுரகவி பாடியே நாவலர்
செழிக்கும்தருகாவளம்கொழிக்கமிகுமேகண்டாய்
(கந்தூரி) (1)

பந்தியாய்ச் சரிகைப்பட்டைதகடிணைத்துப்
பதித்தும்பவளம்பச்சைக்கதிர்கொள் புட்பராகம்
சுந்திரத்துடன் மின்னத் தூண்கள் கொடுங்கைகள்
சுத்திமிகுருபுகள் கொத்து பூஞ்செடியன்ன
துலங்கிடுந்துடவை சூத்திரங்கள்
பலதாடுங்கடவை இரசிதம்
தந்தக் குமிழ்களோடு தங்கமணிக்குச்சும்
சவியற செலைமுத்து குவிகொள் மணிவடங்கள்
அந்தமுறவேதூக்கி யணியாய்க் குடங்கள் நாட்டி
அமைத்தச்செயலைக்கண்டேயிமையாநிற்பர்கோடி
அருளவேயொண்ணு இருளையோட்டும்.
இரவிலுமெண்ணு ஒளிசேர்கூட்டை
கந்தமன் மலர்முகக் காதிற்பாச்சா ருவுத்தர்
காட்டும் பதினொருபேர் நாட்டாமைக் காரர்கள்
தந்திரோர் வலிதுரை தம்பி ருவுத்தர் மிக்க
தரு வாவாசாயபு பெருமையூரவர்கூடி

சாரியாய்ப்பந்தம் செடிவிளக்கு
மூரி யகந்தம் நெருங்கிடவே

அந்தர முலவமே லரிபுகை கமழ்த்தி
ஆமீன் ஆமீன் என்ன மான பாத்திகா வோதி
விந்தையுட னொலிமேல் விரியப் புகழறி ஞோர்
விளங்கத் தீன் தீன் என்ன வளகொளத் தூக்கிடும்
(கந்தூரி) (2)

அறபு ரூம் அஜமி சாமூர் மிசுர் பசறு
அபஷா மகரிபெமன் அந்தாக்கியா திமிஷ்கு
துறுக்கி பல்கு புகாறு புசுறு வன்னி டில்லி
தூரி ஸ்தம்பூர் ஜாரகிர் ஜபலா பைதான் ஜன்னி

தூறுஜான் ஜனுதார் ஜாவறதீமா
வேறு வாண்டாக்த்தார் இவர்கள்முதல்

திறத்தக் கொங்கணர் பப்பர் கிடதர் கொல்லி கலிங்கர்
சேங்கர் சிங்களரங்கர் குந்தளர் கூச்சுரர்
குறித்த வொட்டர் மலையாளர் குற வல்லாடர்
குடகர் பிராமணர் ரஜபுத்திரர் மாராஷ்டர்

கூறுந்தெலுங்கர் கன்னடர்
ஏறதிரங்கர் அருமனியர்

கிறிஸ்தர் புருத்துகீஸர் இஸ்பான்யர் அமேரிக்கர்
கிரேக்கர் ரூஷியர் டச்சு டேனீஸ் பராமனம்பன்
சிறந்தபுரூஷியர் ரோமன் எபிரேயர்
ஜிர்மன் பராஞ்சியர் கோவர் ஹேம்பர்க்கு

சிங்கர் இங்லீஸர் வாதினிப்பேர்
முங்கும்பாரீஸர் எகூதியர்
மறநேர்பருமா மலாய் பத்தா னீனர் அயிலாம்
வஞ்சர் மக்காவுக்காரர் பஞ்சர் ஒக்கியான்காரர்
பொறையோரொாலி முனிகள் ஆலீம் அருத்தாபுகள்
புகழ்ந்து சூழ்ந்துவரும் அலங்கித மிகுத்தசீர்
(கந்தூரி) (3)
சண்டை பேரி முறடு தக்கை தடாரி பீலி
சல்லரி தகுணிதம் வெல்லரிதூரியம்
தண்டு பம்பை முரசு திண்ணங் துந்துபி ஈயம்
தாடணைத்துடிகெடி கோடணைமுழங்கவும்
தட்டைமொந்தைகள் பதலைசின்னம்
திட்டநந்திகள் தொண்டகமிரு
திண்டி தித்திமி திரு ஜெகு ஜெகு ஜெகு ஜெகு
ஜெகக்கிணம் ஜெக்கிணம் ஜேகு ஜெந்தரி குகு
டிண்டிகு டிகுடிகு டிடுட் டுண்டுடு டுண்டுடு
செங்குட் டுடுட்டு டுண்டு கணகண கக கக
திகுர்தத் திகுர்த்திண் டிகுதாதோ
திகுர்த் திதிந் திமியென் றண்டமுக
டண்ட வாதிசேடன் செவிடு பட்டுலையவும்
அட்டகயங்கள் உக்கி கெட்டலறிடபடி
கொண்டல் வெருளப் பண்டிக் கால்கள் நிலம்புதைய
கும்கும்மென்றொலி யெழும் நகராநவுபத்தும்

கொட்டுஞ்சங்கிர்தம் மேளம்வீணை
யெட்டுமிங்கிதம் தாளமுதல்
முண்ட நவரத்திரு மகுடாதி ராஜர்கள்
மோக மேளமத மாகிய காளமும்
பண்டுறு விதவித பறங்கியின் மேளமும்
பண்புடன் முழங்கியே வண்மையுடனே வரும்
(கந்தூரி) (4)

ஆட்டுநதண்டக்காரர் ஆக்கிர குந்தக்காரர்
அஞ்சா சக்கிரக்காரர் நஞ்சூரஸ்திரக்காரர்
கோட்டுங் கோதண்டக்காரர் கொடியசத்திரக்காரர்
கொடுவாள்சுரிகைக்காரருடைவாளெறிவாள்காரர்
சூலேந்தங்கமொளிக்க சுத்தவீரர்கள்
தலேகவிழ்ந்தொளிக்க ரணகளத்தில்
சூட்டுஞ்சூலக்காரர் சுழட்டும் வல்லயக்காரர்
சுருக்கும்வலேக்காரர் முருக்கும் கட்டாரிக்காரர்
தீட்டும்பட்டயக்காரர் தெரிக்குங்கேடையக்காரர்
திருத்துஞ்சவளக்காரர் பருத்ததோமரக்காரர்
திரிதோட்டிக்காரர் மருண்டிடா
எரியீட்டிக்காரர் சூரியனேர்
காட்டுமயில் காரர் கவண்கல்லா யுதக்காரர்
கண்டகோடரிக்காரர் பிண்டிபாலக்காரர்
நீட்டத்தடிகளேந்தி நெருங்குங் கட்டியக்காரர்
நிசிதமுனேகாட்டி நசைவீரர்திகைத்தோட

நிலத்தில் புரண்டு பகைநோக்கி
பலத்தில்வெகுண்டு துடந்துமல்
பூட்டிபாணக் களினல் பொரிபொரிப்பதுநிகர்
பொலியத் தடதடென்றே மலியமடடென்றே
கூட்டமிகுத்துமாருக் குறிக்குஞ்சிலம் பக்காரர்
குலவியேபவனிமுன் அலங்கிர்தத்துடன்வரும்
(கஸ்தூரி) (5)

ஆயிரம்பாணமுடி யமைந்த சேடனனும்
அருளவேயொண்ணத உரிமையுடனேகூடி
தோயிரும்புவியுடன் அண்டமதிரப்பார்க்கும்
தொணியோடு காழகில் தூமப்புகையுவானில்
துகளறச்செல்ல கூறுலீன்கள்
திகைத்துமேகல்ல ஆடைகளை
தேயும்நூலிடையினில் துலக்கிக்காளமுகில்
தேக்குஞ்சுரிகுழலே வாக்காய்வாரிமுடித்து
சாயுமயிர்மாட்டி ராக்கடிஜடையில்லை
தாழம்பூசொருகுபூ தடநாகப்பணிபூட்டித்
தண்மதிநுதலில் பொட்டுமிட்டு
மண்கணேவிழியில் ஸ்மையுமிட்டு
ஆயும் அலுக்கத்து வாளியொடு கும்மத்து
அருமூக்குத்தி நத்து பொருவும் புலாக்கிட்டு
காயும் கிள்ளட்டட்டி சரப்பளி சந்திரஹாரம்
கழுத்திலிட்டு பாஜூபந்து கடகம் தொட்டு

கனகவெட்டியாணம் விசித்துநல்
இனமலி நானம் பூசிக்காலில்
தாயில் பாடகம் தண்டைப் பாதசரமும் பூட்டி
சடுதியிலனவோரும் படியினியலறிந்து
மாயில் தருவைந்தின மலர்களை வருவிக்க
மணி வீதிகடந்துக் கூடணிபந்தல் தோய்ந்திடும்

(கந்தூரி) (6)

முத்துப்பவளம் பச்சை வயிரம் வயிடூரியம்
முதுகோமேதகம் நீலம் கதிர்கொள் புஷ்பராகம்
வைத்தழுத்திலங்கிய மணப்பந்தலதில் கூட்டை
வாகுடனிறத்திடச் சேக்கலிருவுத்தர்
மட்டிலாப்பொருள்கள் மகிழ்வாயச்சில
விட்டுநற்றிரள்கள் புகழ்கொண்டாட
உத்திரவின் படி கொழுத்தும் வாணவகை
உந்தி நவமணிபோல் சிந்துமாகாயவாணம்
சுத்திச்சுழல் சக்கர வாணம் கொம்புவாணம்
தோண்டில்வாணம் குடவாணம் குரங்குவாணம்
துதிகொள் தேர்வாணம் கனைத்தடர்
குதிரைப்பூவாணம் நிலவாணம்
பத்திச்சீறிடும்பாம்பு வாணம் மூஞ்சூருவாணம்
பானைவாணம் கொக்கு வாணம் காவடிவாணம்
சத்தமிகுத்த கப்பல் வாணம் சட்டிவாணம்
ஜனமடர்ந்திடா நிலச்சக்கரம் சீனவெடி

சடசடசடென கலன்கள்வாணம்
மடமடமடென பகபத்தி

மத்தாப்பின் பலவகை மதிகதிரொவ்வாது
வாணகாகூதிதீர்ந்து பேணித்தீபங்களேத்தி
சித்தமகிழ்த்திடுனோர் சிறக்கத் தீன் தீன் என்ன
சீர்த்தியுலவுகூட்டைத்தோஸ்திரத்துடன் தூக்கும்

(கந்தூரி) (7)

சுதைகொள் வீடுகள் தோறும் துதிகொள் மாமகரத்
தோரணங்கள்பல பாரக்கொடிகள் நாட்டி
விதிகொள் கதலிபாளை விரியும் கமுகுதாளூர்
விளங்கும் கரும்புகளும் இளந்தெங்குக்குலேகளும்

விச்சித்ர மாக பூக்கள்சரம்
இச்சைகொண்டேக நிறைத்துகிந்தில்

மதங்கொள் திக்கீர்கபி பேரால் சலவாத்து
வண்மை மறைபுறுகான் உண்மையுடனேதுவோர்
இதயங் கொண் டொலிபேரில் சிந்து வண்ண முதல்
ஏத்தும் பதங்களாதி தோஸ்ரத்துடன் பெண்கள்

இயலுடன்பாடி வாயல்தோறும்
மயமுடன்கூடி குயில்மயில்போல்

விதங்கொண்டிருபுரமும்விளங்கும்தெருக்களெங்கும்
வேண்டும்கடன்போல்மாக்கள்தூண்டும்பூமாலைகள்
மிதங்கொண்டெறிகதிர் வேயும்கூட்டைச்சுத்தி
விந்தை யானதிரு சந்தனக்குடத்துடன்

வேதமுழங்கும் தருகாமுன்
சோதிவிளங்கும் கூட்டைமிக
பதங்கொண்டிட இரக்கிப் பாருள்ளோ ரேத்திடப்
பாங்காய்ச் சந்தனக்குடம் தாங்கி யெடுத்தொலி
இதங்கொள் ரவுலாமிசைப் பூசிடக் கமகமென்
றெங்கும்பரிமளிக்கும் துங்க ரொலி பேரால் செய்

(கஸ்தூரி) (8)

மோகன மாளவம் மங்களகௌசிகை
முகாரி அசாவேரி மத்திய மாவதி
மேகவிரிஞ்சி குறிஞ்சி துஜாவந்தி
வேளாவளி படமஞ்சரி பூபாளம்
விதியாரஞ்சுருட்டி சங்கராபரணம்
மதிசெஞ்சுருட்டி சூரியகாந்தம்
நாகவிராளி விராளி சோகுவிராளி
நாட்டை பந்துவிராளி நரோஜா பிலகரி
ஏகலான கௌளிபந்து தன்னியாசி
எதுகுலகாம்போதி எருக்கலகாம்போதி
இன்பகாமபோதி பியாக்கடை
கும்பகாம்போதி தேசிகதோடி
தாகமான கௌளீ ஆகிரி அட்டணு
சந்தரபுஷ்காணி இந்துஸ்தானிகாப்பி
போகமுற்ற கண்டா ஆனந்தபயிரவி
புன்னாகவராளி பரஜெமுனகல்யாணி

பூரிகல்யாணி கமாஸூ சர
வேரிகல்யாணி இராகமாதி

ஏகதாளம் ஆதிதாளம் அடதாளம்
ஏற்றும் ரூபகதாளம் போற்றும் ஜம்பைகளில்
நாகரீகமாக மாது துதிகளாக
நாடியே தருகர்முன் ஆடிப்பாடிக் குலாவும்

(கந்தூரி) (9)

விலையுயர் பவுன் மோரு விதவிதக்காசுகள்
வேயும் மதுராசு நோயாரூபா பல
சிலிங்கிப் புரான் திக்கல் செல் ஷராப் புடைகளும்
திவ்ய நவரத்தினம் செவ்வியுறு பொன்னகை

திருமுத்துமாலை வயிரமிடைத்
தரும் சித்ரவேலை பவளச்சரம்

மணியும் ரத்தினக்கடை வன்னபட்டு கின்காபு
மத்தாபி பலவகை குத்தினி சகலாத்து
நிலைகொள் வில்லூரிப்பொன் னெரிகசுமீர்பல
நிறங்கொள்சாலுவைகள் திரள்கொள்சேலைகளும்

நிறையப்பொன்புட்டா சவுக்கம் விலை
குறையாபல் பட்டா டைகள்முதலாய்

தலைகொள் சீர்மையொடு பங்காளத் தரவளி
தவரு து விற்கின்ற சவளிக்கடைகளும்
துலங்கும் தங்கசாப்பா ரவுக்கை தாவணிகள்
சுத்தநாடா நூற்கயற் மத்தாபி வளையல்கள்

ஜோதிகொள்கடையும் சீப்புமுதல்
ஜாதிகொள்ளடையும் பழவர்க்கம்

எலிமிச்சை நாருத்தை வாழைப் பலாக் கொய்யா
இனிய மாதுளை ஈச்சம் கனியுமா கொடிமுந்திரி
இலந்தை பொந் தன்னுசு பாலே பலகனிகள்
இயலோடு விற்கின்ற வியமுற்ற கடைசூழ்ந்த

(கந்தூரி) (10)

கல்லுண்டைக் கருஞ்சம்பா கைவரச்சம்பா கார்
காடைச்சம்பா காளான் கோடைச்சம்பா வீக்கி
மல்லிகைச்சம்பா விலுப்பைக் கோரச்சம்பா
மணிச்சம்பா குருவைமா குண்டுமணிச்சம்பா

வளைதடிச்சம்பா சீரகச்சம்பா
மிடகுமைச்சம்பா கருங்குருவை

பொல்லாக்குபபலாய்க் குவிகொள் நெற்கடைகள்
பொதியாய்க்கோதுமைகொள்விதிபயர் மொச்சை
ஒல்லையான பல தானியக்கடைகளும்
ஊனமில்லாதநெய்ச் சீனிசர்க்கரை வெல்லம்

உத்தபல் சரக்கு கடைகளள
வற்றதம்பரக்கு அந்தமிலெங்கும்

மல்லும்பன்னீரத்தர் மஜ்ஜுமா சவாதம்பர்
மாருக்கந்தப்பொடி வீருனபுஷ்பங்கள்
சொல்லெழிலாமிச்சை வெட்டிவேர்முதலான
சுட்டுமணக்கிழங்கு கிட்டும்பூக்கடைகளும்

துலமலி லட்டு ஜிலேப்பிகள்
பலமலிதட்டுத் தட்டாகவே
தொல்லிலி அலுவாக்கள் பூவந்தி சேவு நல்
சுவையோடு சீனியால் இதமான அச்சினில்
பல்லியலுடன்செய்யப் பலர்கொள்ளுங் கடையோடு
பலவிதக்கடைசூழ அலங்கிரதமாய்த்தோன்றும்

(கஸ்தூரி) (11)

ஆதிநாயகன் மூதற்றாதாய்ப் புவியில் வரும்
ஆதமுதலைம்பத்தோர் மூத தலைமுறையில்
சீதவெண் மதிதவழ் திருமாளிகை மக்கமில்
செழும் குறைசிக் குலத்தில் முழுமதி யெனவரும்
திருவாரப்துல்லா மகவாய்ப்பூவில்
வரும் கபீபுல்லா விதித்ததீனின்
நீதிவழுவிடாது நின்று நகுபு சர்பு
நெறியுட னோதியே மறுவற்று புகழுற்று
மூதுணர் செய்கு முகம்மதவர் தவத்தால்
முது கூத்தானல்லூரில் புதுமை யுடன் வந்துற்ற
முற்றும் பிரபல்யர் முகைத்தீன்று
ளூற்றதோடுல்யர் நாற்பதுநாள்
ஓதும் நேரம் விட ஊர்க்கு வெளியே யேகி
ஒருவரறியாக்கைதகைக்குருத்தைப்பொசித்திருந்து
கூது செய்த களிமண் பாத்திரத் தாய்ந்து
தாயபிரியானியாய் நேயமுட னாக்கினோர்,

தோகையுலாவும் சோலைசெறி
நாகையில்மேவும் கவிஞன்பாட
காதலுடன் செம்பொன்னைக்கணக்கிலாதுதவினேன்
கலைதேறப்துல் நத்தர்சிலைமகனிசுமாயில்
ஆதரமகன் சின்னத்தம்பியை யனுதினம்
ஆளுமப்துல் முகம்மதாலீ மொலிபேரால் செய்
(கஸ்தூரி) (12)

சிந்துகள்

முற்றிற்று.





## சித்திரகவிகள்.

நபியுல்லாபேரில்,

கமலபந்தம்

(நேரிசைவெண்பா.)

ஆதிவிதி வேதிமதி சோதிகதி ராதிநிதி
போதிபதி நின்முகநேர் போதுமோ யோதிதமிழ்
விள்ளவறியா வேழை வேண்டுங் கவிக்கருள்மா
வள்ளலிற சூலே மதித்து

மாலைமாற்று.

(கலிவிருத்தம்,)

வாதமேழுவானுதிமணிதமா *
காதமீறியவாசபூதாதிபா *
பாதிதாபூசவாயறிமீதகா *
மாதணிமதினுவாழுமேதவா *

---

குத்துபு முகையத்தீனண்டவரவர்கள்பேரில்
*கரந்துறைச்செய்யுள்.

(நேரிசைவெண்பா.)

அமுதே யகமாதி யற்ற மறுசத்தி
யுமைவெல்ல வல்லா ருலகா ரமைபகுதா
தாதா வழுத்தென் கலிமுதலா யகற்றும்
நாதாவப் துல்காத ரே

---

☞ * இதனுட்கவி திருக்குறள், ௲அதிகாரம்(க)வது, பா.

## சாகுல் கமீதொலி ஆண்டவரவர்கள் பேரில்,

### இரதபந்தம்.

(மேலரைகளின்-வெண்பா.)

அன்பு வளர்தேவே யாதிதிரு மணியே
யின்பமீ தேயளிப்பா யென்னங்கந் துன்புறு
தாயசாவற்றநாயகா தூயாஜேயகா
தாயகாசாகமீதே

(கீழரைகளின்-வெண்பா.)

நீதியேகார் பூமீதில் நின்னைமறேனேருஞ்
சூதுவினைவாராதுயகோமீ சோதிசெறி
வீதிநகர்நாகைவேதிர்வேதா துதிதா
காதிர்கமீதுமதியே

(உருளைகளின்-சிந்தடிவிருத்தம்)

காதுமீதிருஞாபகா *
காபஞானசுரூபிகா *
காபிரூடடரோதிகா *
காதிறேஜெகமீதுகா *

முனாஜாத்துத்திறட்டு

முற்றிற்று.

---

☞ இச்சித்திரகவிகள் விதிப்படி படங்களிலமைத்திருப் பவையை யிதன்பின் காண்க.

